# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Saturday, 27th September 1958.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at nine of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

### *Lower Bhavani Project canal*

* *S.N.Q.* 23.—SRI K. R. NALLASIVAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) கீழ் பவானி வாய்க்காலை இரண்டாகப் பிரித்து நஞ்சை சாகு படிக்குத் தண்ணீர் விடும் யோசனையை சர்க்கார் பரிசீலித்து வருகிறதா ?

(ஆ) அப்படியானால் அந்த யோசனை எந்த அளவில் உள்ளது ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI K. R. NALLASIVAM : ஸார், இந்த அணையில் ஆகஸ்டு முதல் தேதியிலிருந்து தண்ணீர் தேங்கியிருப்பதால், இந்த தண்ணீரை ஆகஸ்டு மாதத்திலிருந்து மே 15 வரை விடுவதைப்பற்றி அரசாங்கம் யோசனை செய்ய முன்வருமா ?

THE HON. SRI P. KAKKAN : இப்போது இருக்கிற முறைப்படி, தண்ணீர் செப்டம்பர் 15-ம் தேதியிலிருந்து மார்ச் 15-ம் தேதி வரை கொடுக்கப்படுகிறது. தண்ணீர் அதிகப்படியாக இருந்தால் கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லுகின்ற யோசனையைப்பற்றி பரிசீலிக்கலாம்.

SRI K. R. NALLASIVAM : ஸார், இப்போது புஞ்சை திட்டத்திற்கு தண்ணீர் விடுவதில் ஏராளமான தகராறுகள் வந்துகொண்டிருக்கின்றன. ஆகவே இது பற்றி ஏதாவது ஒரு நல்ல முடிவுக்கு வருவதற்கு இதைப் பற்றி பரிசீலனை செய்ய இஞ்சினியர்களும் மற்ற அங்கத்தினர்களும் அடங்கிய ஒரு கமிட்டியை நியமிக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI P. KAKKAN : இந்த தகராறுகள் எல்லாம் தீருவதற்காகத்தான் 28-1-1958-ல் செக்ரட்டரியேட்டில் ஒரு கூட்டம் கூட்டப்பட்டது. அதில் புஞ்சை நிலங்கள், நஞ்சை நிலங்கள், தோட்டக்கால் நிலங்கள் இந்த மூன்று நிலங்களேயும் தனித்தனி பகுதியாக பிரித்து அதன்படி திட்டம் வகுக்கவேண்டும் என்று முடிவு செய்து, அதற்காக டெப்யூடி கலெக்டர், இஞ்சினியர் முதலியவர்களை போட்டு நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இந்த முறை நல்லது என்று நினைக்கிறேன். அதல்லாமல் கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்வது போன்று இரண்டு பிரிவாக பிரிப்பது நல்லது அல்ல என்று நினைக்கிறேன்.

SRI G. G. GURUMURTHI : தலைவர் அவர்களே, தற்போது புஞ்சை நிலங்களுக்கு விடப்படும் தண்ணீர் போதுமானது என்று அரசாங்கம் கருதுகிறதா ? இதைப்பற்றி விவசாய இலாகா ஏதாவது ஆராய்ச்சி செய்ததா ? அப்படியென்றால் அதன் பேரில் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது ?

[27th September 1958

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் இதற்கு தனியாக கேள்வி போட்டால் விவரங்களை தெரிவிக்கிறேன். இருந்தாலும் இந்த விஷயத்தில் ஒரு நல்ல முறையை ஏற்படுத்தவேண்டும் என்று அரசாங்கம் முயற்சி செய்து வருகிறது.

SRI K. G. PALANISWAMY GOUNDER : ஸார், இப்போது லோயர் பவானி ஏரியாவில் எங்கள் பகுதியில் 60, 65 சதவிகிதம்தான் தண்ணீர் வருகிறது. இதனால் தண்ணீர் குறைவாகத்தான் கிடைக்கிறது. இதன் காரணமாக வரி வசூல் அதிகமாகப் பாதிக்கப்படுகிறது. ஆகவே இதை நிவர்த்திக்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : லோயர் பவானி அணைக்கட்டில் கடைசி பகுதிகள் பாதிக்கப்படுகிறது என்பது உண்மைதான். அதை நீக்குவதற்கு அரசாங்கம் முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறது.

SRI P. G. MANICKAM : நஞ்சை, புஞ்சை, தோட்டக்கால் என்று பிரிவு செய்வதற்குள்ள சர்வே தீருவதற்கு எவ்வளவு காலம் ஆகும் ?

THE HON. SRI P. KAKKAN : இப்போதுதான் அதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன. கூடிய சீக்கிரம் இது முடிவு அடையும் என்று நம்புகிறேன்.

SRI K. G. PALANISWAMY GOUNDER : ஸார், இந்த பகுதிகளில் தண்ணீர் பெறுவதற்கு வசதி ஏற்படும் வரையிலும் இப்போது நடத்தப்படும் வரி வசூலை நிறுத்தி வைக்க அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : அவ்விதம் ஒன்றும் செய்ய முடியாது.

*Drinking water-supply in the City*

* *S.N.Q.* 24.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government are aware that the drinking water supplied to the residents in the Madras City has deteriorated in quality; and

(*b*) if so, what action has been taken to supply pure water?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes. There has been slight deterioration in the chemical quality of the water during the last few weeks. But the bacterial purity has always been ensured by sterilization of the water with adequate doses of chlorine.

(*b*) Cleaning of slow sand filters and scouring out of the water mains.

SRI N. K. PALANISAMI : Sir, may I know from the Hon. Minister why the water supplied to the City is very bad in taste, and contains bacteria and dust particles? May I also know whether rapid mechanical water filters that have been installed are ineffective with the result that the water contains all sorts of available matter and there is also colloidal suspension?